இப்படி குணகத்தில்வருகிற சுன்னங்களைக்கொண்டுபெருக்காமையால் அதன்பின்னிருக்கிற இலக்கவட்சரத்தைக்கொண்டுபெருக்கிக் காண்கிறமுதற்பேறு இரண்டு இலக்கவட்சரஇடம்விட்டுப் பின்னிட்டெழுதப்படுகிறதையும் மற்றவைகளின்முதற்பேறு ஒரோஅட்சரத்தினிடம்விட்டுப்பின்னிட்டெழுதப்படுகிறதையு முந்திக்காட்டிய உதாரணங்களிலேகாணலாம்.

குண்ணியத்திலுங் குணகத்திலுமுள்ள இலக்கவட்சரங்கள்கூட எத்தனையாகுமோ அத்தனையும் வழக்கமாய்க்குணிதத்திலிருக்கும். குண்ணியத்திலும்குணகத்திலும் தலையிலக்கவட்சரங்கள் சிறுதொகையுள்ளதானாற் குணிதத்திலே ஓரட்சரங்குறைவாகும்.

---

## தமிழ்ப்பெருக்குக்கணக்குவகை.

இத்தேசத்துப்பெருக்குக்கணக்குமுறைதலைதுவக்கிக்கடைவரைக்கும் பெருக்குகிறவகையாம். அவ்விதமாய்க்குணகத்திலுள்ள அந்தந்தக்கணக்கட்சரத்தைக்கொண்டு குண்ணியத்திலுள்ள கணக்கட்சரங்களையெல்லாம் பெருக்கி அதுகளாலுண்டாகிறதனிப்பேறுகளை எழுதுவார்கள். பின்னுங் குணகத்திலுள்ள ஆயிரங்களின்பேறு ஆயிரங்களும், நூறுகளின்பேறு நூறுகளும், தசங்களின்பேறுதசங்களும், ஏகங்களின்பேறுஏகங்களுமாயிருக்கின்றமையாற் குணகத்திலுள்ள அந்தந்தக்கணக்கட்சரத்தாலுண்டானதனிப்பேறுகளைத் தனித்தனியாகத்தொகுத்து அந்தத்தொகையெல்லாம் ஒன்றாய்க்கூட்டுவார்கள். அதினால் தமிழ்முறை சீமைமுறை

யைவிட அதிகவருத்தமும் விரிவுமாகிறதுமன்றிப் பிழையதிலே நுழைகிறதும் ஒளிகிறதுமெளிதாம். உதாரணம்.

தமிழ்முறை.

௭௲௮௱௪௰௯க்கு
௭௱௩௰௫ பெருக்குகிறது.

௪௰௯௲, ௫௲௬௱, ௨௱௮௰, ௬௰௩—நூறாஆ ௫௬௱௯௰௪௲௩௱
௨௰௧௲, ௨௲௪௱, ௱௨௰, ௨௰௭—தசம்ஆ ௨௱௩௰௫௲௪௱௭௰
௩௰௫௲, ௪௲, ௨௱, ௪௰௫—ஏகம்ஆ ௩௰௯௲௨௱௪௰௫
ஆ கூட்டினது ௫௭ இலக்ஷத்து ௬௰௯௲௰௫.

சீமைமுறை.

```
   ௭௮௪௯
    ௭௩௫
 -------
  ௩௯௨௪௫
 ௨௩௫௪௭
௫௪௯௪௩
 -------
௫௭௬௯0௧௫
```

அநேககணக்குகளில் ஒவ்வொன்றைக்கொண்டு மற்றவைகளைப் பெருக்கவேண்டியிருக்கிறபோது முந்தஅதுகளிரண்டைப்பெருக்கி அதுகளின்குணிதத்தை மற்றொன்றைக்கொண்டுபெருக்கி இதினாற்கண்டகுணிதத்தையும் மற்றொன்றினாற்பெருக்கி இவ்விதக்கிரமமாய் முடிவுபரியந்தஞ் செய்யவேண்டும். அவைகளில் எதைக்கொண்டு துவக்கினாலுங் கவையில்லை. ஒரேதொகைவரும். உம்.

| ௫×௭×௩×௬. | ௭ | ௩௫ | ௧0௫ | ௬ | ௧௮ | ௯0 |
|---|---|---|---|---|---|---|
| | ௫ | ௩ | ௬ | ௩ | ௫ | ௭ |
| | ௩௫ | ௧0௫ | ௬௩0 | ௧௮ | ௯0 | ௬௩0 |



# ௫ம். பிரிவு.

## பிரிவுகணக்கு, Division.

ஓர்தொகையில் மற்றோர்தொகை எத்தனைவிசை யடங்கியிருக்கின்றதென்றறிய அதனைப்பிரிப்பதே பிரிவுகணக்கெனப்படும். இதுஈவுகணக்கென்றும் கொடுக்கிறகணக்கென்றும் பெயர்பெறும். இதிலேபிரிக்கப்படுந்தொகை Dividende † பாச்சியமென்றும், பிரிக்குந்தொகை Diviseur ‡ பசகமென்றும், பிரித்துக் கண்டபேறு Quotient * ஈவென்றுஞ்சொல்லப்படும்.

இரண்டுகணக்கின் நடுவே : அல்லது ÷ இக்குறி பிந்தினதை முந்தினதினாற் பிரிக்கவென்பதற்கும், = இதுஈவுஇன்னதென்பதற்கும் அடையாளமாம். வழக்கமாய் அதுகளில் : அல்லது ÷ இக்குறி இல் என்பதாயும், = இது ஆக என்பதாயும் பெயர்க்கப்படும். உம். அ : ச = உ. எட்டில்நாலாகஇரண்டு. அல்லது எட்டைநான்கினாற்பிரிக்க, நாலுபேருக்கு எட்டுகொடுக்க ஈவு இரண்டு. இப்படியே

சா : ௩ = உ. ஆறில்மூன்றாகஇரண்டு.

கஉ : ச = ௩. பன்னிரண்டில்நாலாகமூன்று.

இவ்விதமாகச் சிறுகணக்குகளை எழுதி யெளிதாய்ப்பிரிக்கலாம். மனப்பாடமாய் ஈவுகணக்கிலப்பியாசமாகும்பொருட்டு - உகம். எட்டிலிருக்கும் பெருக்கல் கொடித்தல் வாய்பாடுபார்த்து அந்தந்த அறையிலுள்ள தொகையைப் பாச்சியமாகவெடுத்து அதுக்குநேரான மேற்பக்கத்திலுள்ள தனிக்க

---

† இங்கிலிஷ்பாஷையில் Dividend, ‡ Divisor, * Quotient.

ணக்கைப் பசகமாகக்கொண்டாற் பின்பக்கத்தி
ல்நேராயிருக்கிற தனிக்கணக்கு ஈவாகும், அல்லது
பின்பக்கத்திலுள்ள தனிக்கணக்கைப் பசகமாகக்
கொண்டால் மேற்பக்கத்திலுள்ள தனிக்கணக்கு ஈ
வாகும். உதாரணம்.

௩௫ : ௭ = ௫. ௩௫ : ௫ = ௭.

ஆனாற் பெரியதொகையைப்பிரிப்பதற்கான வ
கைம்யதெனில் அதைப்பாச்சியமாக எழுதி அதன்
முன்மேலேயிருந்து கீழேபோகக் கோடுபோட்டு
இதற்குமுன் ஒரேவரியாய்ப் பசகமாகிறகணக்கை
யெழுதி இதன்கீழேகோடுபோடவும். பின்னும்ப
சகத்தில் எத்தனைகணக்கட்சரங்களுண்டோ பாச்
சியத்துத்தலையில் அத்தனைஅட்சரங்களை ஓர்புள்ளி
யாற்பிரிக்கவும். இதுகள்டசகத்தைவிடச் சிறுதொ
கையானாற் பாச்சியத்தில் ஓர்அட்சரம் அதிகமா
யெடுத்துப்புள்ளியாற்பிரிக்கவும். அதன்பின் அந்த
ப்பாச்சியத்துப்பங்கிலே பசகமெத்தனைவிசை ய
டங்கியிருக்கிறதோவென்றுயோசித்து அதற்கான
கணக்கட்சரத்தைப் பசகத்தின்கீழ் ஈவாகஎழுதவு
ம்வேண்டும். பின்பு ஷெபாச்சியத்துப்பங்கின் ஈ
வாகிய அந்தக்கணக்கட்சரத்தைக்கொண்டு பசகத்
திலுள்ள கணக்கட்சரங்களையெல்லாம் பெருக்கி
அதினாலுண்டாகிறபேறு ஷெபாச்சியத்துப்பங்
கினின்றுகழித்து மிச்சம் அதின்கீழே எழுதக்கட
வீர்கள். மீளவும் பாச்சியத்திற் புள்ளியினாற்பிரித்த
அட்சரங்களுக்கடுத்தஅட்சரத்தை அந்தமிச்சத்து
க்குமுன்எழுதி உ-ம்.பாச்சியப்பங்காகச்சேர்த்து
இதிலேயும் பசகமெத்தனைவிசையடங்கியிருக்கின்
றதெனறுபார்த்து உத்தேசிக்கிறவிலக்கத்தை முந்தி

எவாகஎழுதின அட்சரத்துக்குமுன்எழுதி அதை க்கொண்டும் பசகத்தைப்பெருக்கிக் காண்கிறப ஈறு உ-ம். பாச்சியப்பங்கினின் றுகழித்து இதின்மி ச்சத்தைஇதின்கீழெழுதவும், அப்படி பாச்சியத் திலமீதியானகணக்கட்சரங்கள் எத்தனையுண்டோ அத்தனைமுறை இப்போது சொன்னபிரகாரமாய் ச்செய்யவேண்டியது. உதாரணம்.

| பாச்சியம். | உகூஅ.சரு | கூரு பசகம் |
|---|---|---|
| | அச | சகூ௲ எவு |
| | சகூ௫ | |
| | ௦௦ | |

இந்தஉதாரணத்தில் மேற்சொல்லியபடி பாச்சி யமும் பசகமும் எழுதி இவ்விரண்டுக்கு நடுவிலே யும் பசகத்தின்கீழும் கோடுபோட்டுப் பசகம் அடங்கத்தக்க தொகையாவதற்குப் பாச்சியத்துக் கடையில் மூன்று இலக்கவட்சரம் வேண்டியதா கையில். உகூஅ-ஒருபுள்ளியாலேபிரித்து அதிலே கூரு-நாலுவிசையடங்கியிருக்குமென்று உத்தே சித்து-ச-பசகத்தின்கீழ் எழுதுகிறது. பின்னும் அதைக்கொண்டு பசகத்தைப்பெருக்கி அதின்பே று பாச்சியப்பங்காகிய-உகூஅ-கின்று கழிக்கி றது.எப்படியெனில், ச × ரு = உ௦ ஆகையால்-பாச்சியப்பங்கிலுள்ள-அ-இருபத்தெட்டாக எ ண்ணி இருபத்தெட்டில்-உ௦-போக மிச்சம்-அ-என்றெழுதி, ச × கூ = உச, மீதியானஇரண்டோ டே-உகூ, ஆகையால் இருபத்தாறில்-உகூ-போக சூச்சியம். இப்படி முதற்பாச்சியப்பங்கிலே-அ-மிச்சமாயிருக்கப் பாச்சியத்தில் அடுத்ததாயிருக்கி ற-ச-அத்தோடேசேர்த்து இரண்டாம் பாச்சியப் பங்காக்குகிறோம். அதிலேபசகம் ஒருவிசைஅடங்

கியிருக்குமென் றத்தேசித்து ஈவிலே-௪-என்கிறஅ ட்சரத்துக்குமுன்-௧-எழுதுகிறோம். பின்னும்-௧✕௫=௫, ஆகையால் இரண்டாம்பாச்சியத்துப் பங்கிலுள்ள-௪-பதிலாகவெண்ணி இதிலே-௫-கழித்து-௯-எழுதுகிறோம். பின்னும்-௧✕௯=௯, மீதியானதொன்றோடே-எ-எட்டில்நின்று கழித்து-௧-எழுதுகிறோம். இப்படி-௪௯-மிச்சமாகவிருக்கப் பாச்சியத்திலுள்ள-௫-அதோடேகூட்டிவதினால்-௧௯௫-ஆகும். அதிலேபசகம்-௱-விசை அடங்கியிருக்குமென்றெண்ணி மேல்நின்றபசகத்தைப்பெருக்கி ஷைமுறையோடே மேன்றும்பாச்சியப்பங்கினின்று கழித்து நிலுவையில்லையென்றுகாண்கிறோம். அதைப்பற்றிவெறுஞ்சுன்னங்கடைசியில்வந்தது.

மேற்சொல்லியபடி முந்தினபாச்சியப்பங்கின் மிச்சத்தோடே பாச்சியத்திலடுத்த கணக்கட்சரத்தைக்கூட்டிவதினாலுண்டாகிற மற்றப்பாச்சியப்பங்குகளில்யாதொன்று பசகத்தைவிடச் சிறுதொகையானால் முன்னமே ஈவாக எழுதினகணக்கட்சரத்துக்குமுன் ஓர்சுன்னம்எழுதிப் பின்னும்பாச்சியத்தில் அடுத்த மற்றோர்அட்சரம் அந்தப் பாச்சியப்பங்குக்கு மறுபடிகூட்டி மேற்சொல்லியபிரகாரமாய்க் கணித்துமுடிக்கவேணும். இடைப்பாச்சியப்பங்கிலாவது கடைசிப்பாச்சியப்பங்கிலாவது வெறுஞ்சுன்னம்வந்தால் அப்படியீவிலே சுன்னமெழுதக்கடவீர்கள். உம்.

```
௯0.0௯00 | ௪௫              ௫எஎ.௬0 ௯௫
  00௯0  |------              எ ௬0 |------
    00  | ௨00௨0               00 | ௬0அ
```

ஈவாகவெழுதின கணக்கட்சரஞ் சரியென்றறியு
மேவகையேதெனில் அதினாற்பசகத்தைப் பெருக்கி
க்காண்கிறபேறு அதனைத்தந்தபாச்சியத்துப் பங்
கைவிடச் சற்றுங்குறைவாய் அல்லது அதற்கு ஒத்
ததாயிருப்பதுமன்றி அந்தப்பாச்சியப்பங்கினின்
றுபேறாகழித்தபின் நிற்குமிச்சம்பசகத்தைவிடச்
சிறுதொகையாயிருக்கவேண்டியதாமே. அந்தப்
பேறு பாச்சியப்பங்கைவிடப் பெரியதொகையா
னால் அதனைப்பெறுவித்த ஈவின்அட்சரத்தைக்கு
றைக்கவும், மிச்சத்திற் பசகம் இன்னமொருவிசை
யாவது அடங்கியிருந்தால் ஈவினட்சரத்தை உயர்
த்தவும்வேண்டும்.

பசகம்பெரியதொகையாகில் தான் ஈவாகவுத்தே
சித்து நியமிக்கிறஅந்தந்தஅட்சரத்தை எழுதுவத
ற்குமுன் அதுதகுமோ இல்லையோவென்று பரி
சோதிப்பது நன்று. ஆதலால்அதைக்கொண்டு பச
கத்தலையிலுள்ள முதலட்சரத்தைப் பெருக்கிக்கா
ண்கிறபேறு எழுதாமற் பாச்சியப்பங்கின் தலையி
லுள்ள முதல்அட்சரத்தைவிடக் கொஞ்சகுறைவா
னதொகைசொலிக்குமோ இல்லையோவென்றுசோ
திக்கிறதுமுறை. பசகத்திலிருக்கிறதைவிடப் பாச்சி
யப்பங்கில் ஒருகணக்கட்சரமதிகமிருந்தாற் பாச்
சியப்பங்கின்தலையிலுள்ள இரண்டக்ஷரத்தைப்
பசகத்தலையிலுள்ள முதலக்ஷரத்தோடே ஒத்துப்
பார்த்துச் சோதிக்கவேண்டும். அப்படிசோதித்
துவருகையில் அந்தபசகத்தின்அட்சரத்துப்பெ
ருக்குதருந் தசங்களுக்குத்தங்கபடிமிச்சத்தைகொ
டுக்கும் அட்சரத்தை ஈவாகநியமித்தெழுதி அதை
க்கொண்டு பசகத்திலுள்ள கணக்கட்சரங்களையெ

ல்லாம் பெருக்கிக்காண்கிறபேறுபாச்சியப்பங்கிற் கழிக்கலாமே.

பாச்சியமும் பசகமும் பெருந்தொகையாயிருக்கும்போது ஈவாகஎழுதுகிற அந்தந்தக்கணக்கட்சரம்பசகத்தைப்பெருக்கித் தருகிறபேறுகளையெழுதாமற் பாச்சியப்பங்கினின்று ஷெ உதாரணங்களிற்செய்ததுபோலே உடனேகழிப்பதினாற் கலக்கமாகில் அந்தந்தப்பேறுஎழுதிக்கழிக்கலாம். அதன்பின் பாச்சியத்தி லடுத்தஅட்சரத்தையெடுத்துக்கூட்டி மேற்சொல்லியமுறையாய்க் கணக்குமுடிக்கலாகும். உதாரணம்.

விரிவானவிதம்.

| | |
|---|---|
| ௮௨௩௭.௩௫ | ௯௩௫ |
| ௭௪௮0 | ௮௮௧ |
| ௭௫௭௩ | |
| ௭௪௮0 | |
| ௯௩௫ | |
| ௯௩௫ | |
| 0 0 0 | |

சுருக்கமானவிதம்.

| | |
|---|---|
| ௮௨௩௭.௩௫ | ௯௩௫ |
| ௭௫௭௩ | ௮௮௧ |
| ௯௩௫ | |
| 0 0 0 | |

பாச்சியத்தின் ஈற்றிலேயும் பசகத்தின் ஈற்றிலேயும் சுன்னம்வந்தால் அதிலேயுமிதிலேயும் ஒத்தகணக்காய்ச் சுன்னம்நீக்கிப் பிரிவுகணக்காக்கலாம். உதாரணம்.

௨௮00 - பேருக்கு - ௧0௨௨0000 - கொடு.

௧-வது. விரிவானவிதம்.

| | |
|---|---|
| ௧0௨௨0.000 | ௨௮00 |
| ௧௮௨00 | ௩௬௫0 |
| ௧௪0 00 | |
| 000 | |

௨-வது. சுருக்கமானவிதம்.

| | |
|---|---|
| ௧0௨.௨00 | ௨௮ |
| ௧௮௨ | ௩௬௫0 |
| ௧௪0 | |
| 00 | |

இப்படி இந்த உதாரணத்துக்கு முதல்விதத்தி
லே பசகத்திலும் பாச்சியத்திலுமிருக்கிற இரண்
டுசுன்னம் -௨-ம்.விதத்தில் நீக்கிவிட்டிருந்தா லு
மொரேவுகண்டது. ஆதலால் ஈவுகணக்குச்சுருக்க
மாகும்படி இவ்விதமாய்ச் சுன்னம்நீக்குவது நல
ம். ஆனாற்பசகத்திலெத்தனை சுன்னம்நீக்குகிறமோ
பாச்சியத்திலும் அத்தனை நீக்கலாமொழிய அதிக
ம் நீக்கலாகாது. ஆதலால் ௩ உதாரணத்திற் ப
சகத்திலிருக்கிறதைவிடப் பாச்சியத்திலிரண்டுசுன்
னம் அதனமாயிருக்க அவைகளை இருவிதஉதாரண
த்திலுஞ்சேர்த்தோம். அவ்வண்ணமே அநேகசு
ன்னத்தால்முடிகிறபாச்சியத்தை -௧0ஆல்லது-௧00-
௧000 - பேருக்கும்பிரிக்க அதிலேபத்துக்கு ஒருசு
ன்னமும், நூற்றுக்கு இரண்டுசுன்னமும், ஆயிரத்
துக்கு மூன்றுசுன்னமும் நீக்குவதினால் ஈவுகணக்
குஉடனேமுடியும். இப்படி

| பாச்சியம் | பசகம் | ஈவு |
|---|---|---|
| ௯௪௫000 | ௧0 | ௯௪௫00 |
| ௯௪௫000 | ௧00 | ௯௪௫0 |
| ௯௪௫000 | ௧000 | ௯௪௫ |

முந்தின உதாரணங்களின்மேற்றம்பாச்சியப்ப
ங்கில்விளங்குகிறபடி ஓர்பாச்சியப்பங்கு வெறுஞ்சு
ன்னமாயிருக்கிறபோதும் பசகத்தைவிடச் சிறு
தொகையாயிருக்கிறபோதும்முன்சொன்னபடி ஈ
விலேஒருசுன்னமெழுதவேண்டும். ஆயினும் பிர
தானபாச்சியத்திலின்று ஓர்சுன்னமாவதுமற்றொ
ரெண்ணக்கட்சரமாவது எடுத்துக்கொண்ட பாச்சிய
ப்பங்கைப்பற்றி ஈவிலே சுன்னமெழுதலாமொழி
யக் கடைசிப்பாச்சியப்பங்கிற் கழிப்பானமிச்ச
த்தைப்பற்றி எழுதலாகாது. அப்படிப்பட்டமிச்ச
மிருந்தாலதனை இடையெண்ணாக்கி ஈவோடேசேர்
த்துக்கொள்ளவேண்டும். அதெப்படியெனில் ஈவு

கள் ஈவாகவந்ததைக்காண்க. எனெனிற் புள்ளியும் தற்கு முன்மீதியான மற்றஇரண்டு அட்சரங்களு ம்மூன்ருகும். மற்றவுதாரணங்களிலு மிதுபிரத்தி யட்சமாகவிளங்கும்.

பசகம் பன்னிரண்டுக்குமேற்படாத பிரிவுகண க்குக்குச் சுருக்கமானவிதமுண்டு. அதேதெனிற் பாச்சியமும் அதின்கீழ் மனப்பாடமாய்க்கணித் து எழுதப்படுகிறஈவுந்தவிர மற்மென்றும் எழு தஅவசரமில்லை. உம்.

சுகூ0ரு - என்பதை மூன்றிஞற்பிரிக்க,
உரு0க - ஈவாகும்.

அதெப்படியெனில் ஆறில்மூன்ருக - உ. ஒன் பதில்மூன்ருக - ரு. சுன்னத்தில் மூன்ருக - 0. மூன் றில்மூன்ருக - க - ஆகும். அப்படியே

ருஅசுகூ - என்பதைநாலிஞற்பிரிக்க
கசஎஎ - வ - ஈவாகும்.

அதெப்படியெனில் ஐந்தில்நாலாக - க. அதிலே மீதியானஒருதசமும் எட்டும் - கஅ. பதினெட்டில் நாலாக - ச. இதிலும்மீதியான இருதசமும் ஆறு ம் - உசு. இருபத்தாறில் நாலாக - சு. மீதியான இரு தசமும் ஒன்பதும் - உகூ. இருபத்தொன்பதில்நா லாக - எ. மீதியானஒன்றிலேநாலாக - வ - ஆகும். அப்படியே

க0அச0ரு என்பதை ஒன்பதாற்பிரிக்க
கஉ0சரு ஈவாகும்.

---

## பெருக்குக்கணக்கின்பரிட்சை.

மூன்றுவிதமாய்ப் பெருக்குக்கணக்கின்பரிட் சைசெய்யலாம். முதலாவது. பிரிவுகணக்கிஞல் அ

தைச்சோதிக்கலாகும். அதெப்படியெனிற் குணி
தத்தைக்குண்ணியத்தாலாவது குணகத்தாலாவதுபி
ரிக்கவேண்டும். இப்படிகுணிதத்தைப் பாச்சிய
மாகவுங் குண்ணியமுங் குணகமுமாகிய இவ்விர
ண்டில் ஒன்றைப்பசமாகவும்வைத்து முறையோ
டேபிரித்தால் மற்றொன்று ஈவாகவரும். இதைப்
பெருக்குக்கணக்கில்-ஙச-ம், ஙரு-ம். பக்கங்களின
டியிலுள்ள உதாரணங்களைக்கொண்டுகாட்டுவோ
ம். உதாரணம்.

உஎகூ.ரு | சங
உகரு | சாரு
00

ஙஙகூகூகூ.உசசா | சாஎ0உ
சஅகூஉச | ரு0எங
உ0க0சா
0000

உ-வது. குண்ணியமுங் குணகமுமாகிய இவ்
விரண்டிலொன்றை ஒருமடங்கதிகமாக்கி மற்றொ
ன்றைப் பாதியாகக்குறைத்துப் பெருக்குக்கணக
குச்செய்தால் முன்னேகண்ட குணிதம்மே மறுப
டிகாணும். உம்.

க

அருசசா
சாருகூ
எசாகூகச
சஉஎங0
ருகஉஎசா
ருசாஙகஅகச

உ

கஎ0கூஉ
ஙஉகூஉ
கருஙஅஉஅ
ஙசகஅச
ருகஉஎசா
அரைக்கு அருசசா
ருசாஙகஅகச

ங

சஉஎங
கஙகஅ
ஙசகஅச
சஉஎங
கஉஅககூ
சஉஎங
ருசாஙகஅகச

இதிலே -க-என்கிறகணக்கினாற் குறிக்கப்பட்ட
பெருக்குக்கணக்கின் குண்ணியமுங் குணகமுமற்
றவைகளில் ஒருமடங்காகவுயர்த்தவுங் குறைக்கவும்
பட்டதையுங்குணிதம் ஒத்ததாயிருக்கிறதையுங் கா
ண்க.

௩-வது. குணியத்திலுங் குணகத்திலுங் குணிதத்திலுமுள்ள கணக்கட்சரங்களைத் தனித்தனியாகத் தொகுத்து அதனின் தொகையில் -௯- எத்தனைவிசை அடங்கியிருக்கிறதோ அத்தனைவிசையு மதைக் கழித்து ஒவ்வொன்றின்மிச்சத்தைக் குறுக்கான இரண்டுகோட்டின் முனையிலேயெழுதிக் குணியத்தின்மிச்சத்தைக் குணகத்தின்மிச்சத்தைக்கொண்டு பெருக்கி இதின்பெற்றியையுமுள்ள -௯- எல்லாங் கழித்தபின் இதின்மிச்சங் குணிதத்தின்மிச்சத்தோடே ஒத்ததாய்க்காணவேண்டும். மீளவும் -௯- கழிக்கிறதுபோலே -௩- கழித்துப்பரிட்சைசெய்யலாம். கடைசியுதாரணங்களில் இடையிலுள்ளதை நீக்கி மற்றிரண்டையுங்கொண்டு இதற்குதாரணங் காட்டுவோம்.

| ௯-கழித்தபரிட்சை. | | | ௩-கழித்தபரிட்சை. | | |
|---|---|---|---|---|---|
| | குணிதமிச்சம் ௧ | | ௧ | ௧ | ௧ |
| குண்ணியமிச்சம் | ௫ ┼ ௨ | குணகமிச்சம் | ௭ ┼ ௪ | ௨ ┼ ௨ | ௧ ┼ ௧ |
| | ௧ இவ்விரண்டின்பேறுதந்தமிச்சம். | | ௧ | ௧ | ௧ |

## பிரிவுகணக்கின் பரிட்சை.

பிரிவுகணக்குக்கும் மூன்றுவகைப் பரிட்சையுண்டு. முதல்வது. பெருக்குக்கணக்கைக்கொண்டு அதைப்பரிட்சிக்கலாம். அதெப்படியெனிற் பசகமும் லப்தமும் ஆகிய இவ்விரண்டிலொன்றைக் குணியமாகவும் மற்றொன்றைக் குணகமாகவும் வைத்துப்பெருக்கினாற் பாச்சியங் குணிதமாகக் காணவேண்டும். ஆனாற் பிரிவுகணக்கில் மிச்சங் கண்டிருக்கு

௯-குழித்தபரீட்சை. ௰-குழித்தபரீட்சை.

```
  0        0        0          0        0        0
0─┼─௯    0─┼─௯    0─┼─௯      0─┼─0    0─┼─0    0─┼─0
  0        0        0          0        0        0
```

## தமிழ்ப்பிரிவுகணக்குவகை.

தமிழ்ப்பிரிவுகணக்குப் பசகமடைந்தக்க பாச்சியத்துத்தனிக்கணக்கக்ஷரங்களுக்கு வந்த கணக்கக்ஷரத்தைஉத்தேசித்துப் பாச்சியத்திலேவிடுத்த இலக்கத்துக்குத்தக்கபடி அதை ஆயிரம் அல்லது நூறு அல்லதுதசம் அல்லது ஏகமாகநியமித்து அதைக்கொண்டு பசகத்திலுள்ள அட்சரங்களைத் தமிழ்மாதிரியாகப் பெருக்குவார்கள். பின்பு அது களின்பேறெல்லாங்கூட்டித் தொகையைப்பாச்சியத்திலின்று கழிப்பார்கள். பாச்சியமெல்லாங் கழித்துப்பூச்சியமாக்கி எவெல்லாம்பெற்றபேறு ம் அப்படியுத்தேசித்து நியமித்துப்பெருக்கிக் க ழித்துவருவார்கள். உம்.

சஅ - பெருக்கு - ௯அ௱௯௰அசா௲௰ - கொடு.

சா - அத - ௯உ௱த
௲ - ,, - சா௲
அ - ,, - ௯சத

௯௯௱௯௰சத - போக நீக்கு - உ௱சதசா௯௰.
சா - சா - ௱௯௰த
௲ - ,, - உ௰த
அ - ,, - ௯தஉ௱.

தொகையாகில் அதிலே பேரிலக்கமடங்கி யிருப்ப தினால் முன்னிலக்கங் கிரமவெண்ணும் பெயராக வும் பங்கு என்கிற சொல் இயல்பாகவும் வரும். உம். ௨௪/௧௬, பதினாறும்பங்கு இருபத்துநாலு.

சீமைப்பாஷையிலோவெனிற் பின்னிலக்கமுந்த ச் சொல்லப்படுகிறதுமன்றி முன்னிலக்கம் எப் போதுங் கிரமவெண்ணும் பெயராகவரும். உம். 1/8, un huitième; 4/8, quatre huitièmes; 24/16, vingt-quatre seizièmes.

---

சீமைச்சிற்றிலக்கங்கள் வழங்குமுறை.

| சீமை அக்ஷரம் | தமிழ் அக்ஷரம் | தமிழில் அதற்கொத்தசிற்றிலக்க அக்ஷரம், அல்லது அதின் விவரவாக்கு. |
|---|---|---|
| 1/2 | ௧/௨ | 𑿑 - இருபங்கில் ஒன்று. |
| 1/3 | ௧/௩ | மூன்றுபங்கிலொன்று. |
| 1/4 | ௧/௪ | 𑿐 - நாலுபங்கில் ஒன்று. |
| 1/5 | ௧/௫ | 𑿏 - ஐந்துபங்கிலொன்று. |
| 1/6 | ௧/௬ | ஆறுபங்கில் ஒன்று. |
| 1/7 | ௧/௭ | ஏழுபங்கில் ஒன்று. |
| 1/8 | ௧/௮ | 𑿌 - எட்டுப்பங்கில் ஒன்று. |
| 1/9 | ௧/௯ | ஒன்பதுபங்கிலொன்று. |
| 1/10 | ௧/௧0 | 𑿋 - பத்துப்பங்கிலொன்று. |
| 1/11 | ௧/௧௧ | பதினொருபங்கிலொன்று. |
| . . . . . . | . . . . . . | . . . . . . |
| 1/20 | ௧/௨0 | 𑿈 - இருபதுபங்கில் ஒன்று. |
| 1/21 | ௧/௨௧ | இருபத்தொருபங்கிலொன்று. |
| 1/30 | ௧/௩0 | முப்பதுபங்கிலொன்று. |
| 1/40 | ௧/௪0 | 𑿄 - நாற்பதுபங்கில் ஒன்று. |
| . . . . . . | . . . . . . | . . . . . . |
| 1/100 | ௧/௧00 | நூறுபங்கிலொன்று. |
| 1/101 | ௧/௧0௧ | நூற்றொருபங்கிலொன்று. |
| . . . . . . | . . . . . . | . . . . . . |
| 1/1000 | ௧/௧000 | ஆயிரம்பங்கிலொன்று. |
| 1/10000 | ௧/௧0000 | பதினாயிரம்பங்கிலொன்று. |
| 1/100000 | ௧/௧00000 | இலக்ஷம்பங்கிலொன்று. |
| 1/1000000 | ௧/௧000000 | பத்திலக்ஷம்பங்கில் ஒன்று. |
| 1/10000000 | ௧/௧0000000 | கோடிபங்கிலொன்று. |

வோம். உம். ௪/௱௨-என்கிற சிற்றிலக்கத்தில்-௪-என்பது எண்ணிக்கைக்குறிப்பாகவும் பின்னிலக்கமாகவுமிருக்கின்றது. ௱௨ - என்பதோவெனில் நக்மகாரணமும் முன்னிலக்கமுமாமே.

ஒரேயெண்ணிக்கை யொருசிற்றிலக்கத்திலிரண்டு இலக்கங்களுக்குங் கூட்டலும் அல்லது அதனினின்று கழித்தால் அந்தச்சிற்றிலக்கம் கொடுக்கிறதொகை வேறுபடும். உம். ௬/௫- என்பதற்கு -௨- என்பதைக் கூட்டினால் ௮/௭-என்பதாகும்

ஓர்சிற்றிலக்கத்திற்பின்னேயிருக்கிற இலக்கமாத்திரம்பெருகினால் அந்தச்சிற்றிலக்கத்திலெத்தனைபங்குகள் அதிகமாய்ச்சேருகிறதோ அந்தச் சிற்றிலக்கந்தானே அவ்வளவுதிகமான தொகைகொடுக்கும். உம். ௪/௧௨, ௮/௧௨.

பின்னேயிருக்கிறஇலக்கத்தைமாத்திரமே பெருக்கினால் அந்தச்சிற்றிலக்கமவ்வளவு குறைவானதொகைகொடுக்கும். உம்.

௪/௰௨, ௨/௰௨. அதெப்படியெனில் ஒன்றைபத்திரண்டுபங்காகப்பிரித்திருக்க அவைகளிலெட்டுகொண்டவனைவிட -௪- கொண்டவன் பாதிகுறைவாங்கினான் -௨- கொண்டவன் இதனிலும் பாதி குறைவாங்கினன்.

ஆனால் ஓர்சிற்றிலக்கத்தில் முன்னேயிருக்கிற இலக்கமாத்திரமே பெருகினால் ஏகமானது அதிகமானபங்குகளாய்ப்பிரிந்திருப்பதினால் இதனிசின்னதாகும். அதைப்பற்றி அந்தச்சிற்றிலக்கமுங் குறைவுள்ளதொகைகொடுக்கும். உம்.

௩/௰௨, ௩/௨௪.

முன்னேயிருக்கிற இலக்கமாத்திரமே பெருக்கின

னி எத்தனைப்பங்குகளின் கணக்குதானையே அது கள் அதிகப்பெரிதாயிருப்பதினால் அந்தச்சிற்றிலக்கமு மதிகப்பெரியதொகைகொடுக்கும் உம்.

௩/௰௨, ௩/௬. அதெப்படியெனில் ஒரு ரூபாயை ௰௨ பங்காக்கினால் மூன்றுபங்கு கால்ரூபாயும், ௨௪ பங்காக்கினால் மூன்றுபங்கு அரைக்கால்ரூபாயும், ௬ பங்காக்கினால் மூன்றுபங்கு அரைரூபாயுமாம்.

ஆகையினாலே ஒருசிற்றிலக்கத்தைப் பெருக்குகிறதற்கு அதின்பின்னிலக்கத்தைப்பெருக்கவேணும், அல்லது அதின்முன்னிலக்கத்தைப் பிரிக்கவேணும். இப்படி ௩/௨0 என்பதை நான்மடங்காக இரண்டுவிதமாய்ப்பெருக்கினால், ௰௨/௨0 எனவும், ௩/௫ எனவும்வரும்.

ஒருசிற்றிலக்கத்தைப் பிரிப்பதற்கு அதின்பின்னிலக்கத்தைப்பிரிக்கவேணும், அல்லது அதின் முன்னிலக்கத்தைப்பெருக்கவேணும். இப்படி ௩/௭ என்பதை மூன்றாய் இவ்விருவிதமாய்ப்பிரித்தால், ௧/௭ எனவும், ௩/௨௧ எனவும்வரும்.

ஒரேயெண்ணைக்கொண்டு ஒருசிற்றிலக்கத்தின்பின்னிலக்கமும் முன்னிலக்கமும் பெருக்கினால் அல்லது பிரித்தால் அந்தச்சிற்றிலக்கம் வேறுபடாததொகையாகும். இப்படி $\frac{௧}{௨}, \frac{௨}{௪}, \frac{௪}{௮}, \frac{௮}{௰௬}, \frac{௧௬}{௩௨}, \frac{௧௬00}{௩௨00}$ என்னுஞ் சிற்றிலக்கங்கள் எல்லாம் ஒரேதொகையாகிய அரைகொடுக்கும் ஆறு விலைகளில் முதற் சிற்றிலக்கமாகிய ௧/௨ என்பது மற்றவைகளை விடச் சுருக்கமாயிருக்கின்றமையால் அவைகளிற் செவ்வையாயிருக்கின்றது.

## சிற்றிலக்கங்களைச் சுருக்கமாக்குதல்.

இப்போது கண்டபடியே சிற்றிலக்கங்களை அதிக தெளிவாக்குதற்கு அதுகளைச் சுருக்கமாக்கவேணு மதற்கு அதுகளின் இருவிலக்கங்களையும் ஒரே கணக்கிலொன்று இயன்றமட்டும் பிரிக்கவேண்டும். அதுகளின் முடிவில் ௦, ௨, ௪, ௬, ௮ - என்னுங்கணக்கக்ஷரங்களிருந்தால் இரண்டாகவும், ௫-அல்லது ௦- என்னுங்கணக்கக்ஷரமிருந்தால் அதுகளை ஐந்தாகவும் பிரிக்கலாம். அதுகளின் கணக்கக்ஷரங்கள் தனித்தனியாய் எதுக்களைப்போலேகூடி மூன்றாய்ப்பிரியத் தொகைகொண்டால் அந்தச்சிற்றிலக்கத்தி னிருவிலக்கங்களையுமூன்றாய்ப்பிரிக்கலாம். இருவிலக்கத்தின் கடைசியிலுஞ் சுன்னமிருந்தால் பின்னிலக்கத்திலும் முன்னிலக்கத்திலும் ஒத்தகணக்காய்ச் சுன்னந்தள்ளலாம். உம்.

௬௦/௧௮௦-என்பதிற் சுன்னத்தள்ளினால் ௬/௧௮-என்பதாகும். இதை இரண்டாய்ப்பிரித்தால் ௩/௯ எனவும், பின்னுமதைமூன்றாய்ப்பிரித்தால் ௧/௩ எனவும்வரும். ஆனபடியினாலே ௬௦/௧௮௦-ஆனபதாகப் பிரித்தால் ௧/௩ என்பதாம். அப்படியே ௭௨/௩௬௦ என்பதைமூன்றுவிசை இரண்டாய்ப் பிரித்தால் ௩௬/௧௮௦-எனவும், ௧௮/௯௦ - எனவும், ௯/௪௫-எனவும்வரும். திரும்ப இதை இரண்டுவிசை மூன்றாய்ப் பிரித்தால் ௩/௧௫-எனவும், ௧/௫-எனவும்வரும். ஆனபடியினாலே ௭௨/௩௬௦ எழுபத்திரண்டாய்ப் பிரித்தால் உடனே ௧/௫-என்பதுதான் வருகுது, இப்படியே தகமையாய்ச்சுருக்கமாய்ப்பிரிக்கலாம்.

இரண்டாகவும் மூன்றாகவும் ஐந்தாகவும் பிரிக்கப்படாத சிற்றிலக்கங்களை ௭, ௰௧, ௰௩- முதலியதுகளாகப்பிரிக்கப்படுமோவென்று பரிசோதிக்கவேண்டும். இப்படியே ஓர் சிற்றிலக்கத்தை இயன்ற

மட்டும் கொஞ்சக்கணக்கக்ஷரங்களிலே சீக்கிரத்தில் அடக்குகிறதற்கு அதின் இருஇலக்கங்களையும் அதிகமாய்ப் பிரிப்பதற்குரிய பொதுப்பசகத்தைத்தேடி இதைக்கொண்டு அதுகளைப்பிரிக்கவேண்டும்.

---

### அதிகமாய்ப்பிரிப்பதற்குரிய பொதுப்பசகத்தைத் தேடிக்கொள்ளும் வகை.

ஓர் சிற்றிலக்கத்தினிருவிலக்கங்களையு மதிகமாய்ப்பிரிப்பதற்குரிய பொதுப்பசக மின்னதென்று அறிவதற்கு முந்தச் சிற்றிலக்கத்தின் இரண்டிலக்கங்களிற் பெரியதொகையாயிருக்கிறதைச் சின்னதைக்கொண்டு பிரிக்கவேண்டும். மிச்சமில்லாதிருந்தால் அந்தச்சின்னஇலக்கந்தான் அதிகமாய்ப்பிரிப்பதற்குரிய பெரியபொதுப்பசகமாகும். மிச்சமிருந்தால் இந்தமிச்சம் பசகமாகவைத்து அதைக்கொண்டு சின்னஇலக்கத்தைப்பிரிக்கவேண்டும். மறுபடிமிச்சமுண்டானால் இந்தவிரண்டாம் மிச்சத்தால் முதல்மிச்சத்தைப்பிரிக்கவேண்டும். இவ்விதமாய்ப்பிரிக்குந்தோறும் மிச்சமுண்டாகிறவளவிற் கடைசிமிச்சத்தைப் பசகமாகவைத்து அதைக்கொண்டு முந்தினமிச்சத்தைப் பிரிக்கவேண்டியது. மிச்சமற்றதை ஒடுக்கும்பசகமானது அதிகமாய்ப் பிரிப்பதற்குரிய பொதுப்பசகமாயிருக்கும். உம்.

௧௩௨/௨௪0 என்னுஞ் சிற்றிலக்கத்தையதிகமாய்ப்பிரிப்பதற்குரிய பொதுப்பசகந்தேடும் வகையாவது:

| | | | | |
|---|---|---|---|---|
| | ௧ | ௧ | ௪ | ௨ |
| ௨௪0 | ௧௩௨ | ௧0௮ | ௨௪ | ௧௨ |
| ௧0௮ | ௨௪ | ௧௨ | 0 0 | |

முதலாவது அந்தச்சிற்றிலக்கத்தின் முன்னிலக்கத்தைப் பின்னிலக்கத்தாற் பிரிக்குமளவில் -க- ஈவாகவும், ௱அ- மிச்சமாகவும்வந்தது ஈவுபசகத்தின்மேலெழுதி அந்தமிச்சத்தைப் பசகமாகமறுபடியுமெழுதி அதைக்கொண்டு பின்னிலக்கத்தைப் பிரிக்கையில் க- ஈவாகவும், உ௪. மிச்சமாகவுங்கிடைத்தது. திரும்ப அந்தமிச்சத்தைப் பசகமாகவைத்து அதினால் முந்தினமிச்சத்தைப் பிரிக்கும்போது ௪- ஈவாகவும், ௰உ. மிச்சமாகவுமுண்டாயிற்று. பின்னு மிதனையும் பசகமாகவெழுதி இதினால்முந்தினமிச்சமாகிற -உ௪- பிரிக்குமளவில் உ- ஈவாகச்சரியாய்வரும். மிச்சமில்லை. ஆகையால் அந்தக்கடைசிப் பசகமாகிய -௰உ- என்பது மேற்சொல்லியசிற்றிலக்கத்தின் முன்னிலக்கத்தையும் பின்னிலக்கத்தையும் அதிகமாய்ப்பிரிப்பதற்குரியபொதுப் பசகமாமே. இதைக்கொண்டு கா௰உ, உ௪0 என்னும் அதினிருவிலக்கங்களையும் பிரித்தால் கக - எனவும், உ0-எனவும் ஈவாகவரும், அதெப்படியெனில்.

```
கா௰உ | க௨         உ௪0 | க௨
க௨   | கக          00 | உ0
0 0  |
```

ஆகலால் கக/உ0 - என்பதுதான் மேற்சொல்லியசிற்றிலக்கத்தின் சுருக்கமானவடிவாம்.

வேறேஉதாரணமாவது: கூகா/உஉஅ - என்பதின் பொதுப்பசகமேது.

```
         உ        உ        க       உ
உஉஅ | கூகா  | ௱கா  | உ௪  | க௨
௱கா  | உ௪   | க௨   | 00  |
```

க௨ - என்பது கூகா/உஉஅ - என்னுஞ்சிற்றிலக்

கூற்றி னிருவிலக்கங்களையு மதிகமாய்ப்பிரிப்பதற்குரிய பொதுப்பசகமாகையால் அதைக்கொண்டு இதுகளைப்பிரிப்போம்.

| | | | | |
|---|---|---|---|---|
| ௯௬ | ௧௨ | | ௨௨௮ | ௧௨ |
| ௦௦ | ௮ | | ௧௦௮ | ௧௯ |
| | | | ௦௦ | |

ஆதலால் ௮/௧௯-என்பது மேற்சொல்லியசிற்றிலக்கத்தின் அதிசுருக்கமானவடிவாம்.

## முதன்மையானவிலக்கங்கள்.

கடைசிப்பொதுப்பசகமாக-௧-வரும்போதுசிற்றிலக்கம் அதிசுருக்கமாகக்கூடாதென்பதற்கடையாளமாம். ஆதலால் அதுசுருக்கப்படாதசிற்றிலக்கமென்னப்படுவதுமன்றி அதினிலக்கங்கள் தமக்குள் முதன்மையாயிருக்கும். ௧-என்றவிலக்கமுந்தனக்குத்தானுமாத்திரம் பசகமாகத்தக்க இலக்கமானது முதன்மையானஇலக்கமெனப்படும். உம். ௧, ௩, ௫, ௭, ௧௧, ௧௩, ௧௭, ௧௯-முதலியவையாம்.

௧-என்பதைமாத்திரம் பொதுப்பசகமாக ஏற்கிறவிலக்கங்கள் தமக்குள்முதன்மையானவையென்னப்படும். உ-ம். ௫, ௬; ௮, ௯; ௧௨, ௨௫.

## சிற்றிலக்கப்பேரிலக்கங்களைப்பிரிக்கவுஞ் சேர்க்கவு முண்டானவகை.

ஓர்சிற்றிலக்கத்தில் முன்னிலக்கத்தைவிடப்பின்னிலக்கம்பெருந்தொகையானால் அதுசிற்றிலக்கப்பேரிலக்கமாம். அதிலடங்கிய பேரிலக்கந்தெரியும்படி முன்னிலக்கத்தாற்பின்னிலக்கத்தைப்பிரித்துஈவி

ன் முன்னமேமிச்சத்தையும் இதின்கீழேமுன்னில க்கத்தையுமெழுதவேண்டும். உம்.

௧௫/௪. என்பதைப்பிரிக்கும்போது - ௩ - ஈவாகவும் ௩-மிச்சமாகவும்வரும், ஆதலால்- ௩ ௩/௪ எழுதவேணும். இவ்விதமாய் ௨0/௪ = ௫; ௩0/௧௨ = ௨ ௬/௧௨ அல்லது ௨ ௧/௨; ௨௪/௭ = ௩ ௩/௭; ௩௫/௮ = ௪ ௩/௮.

பேரிலக்கத்தையு மதைச்சேர்ந்த சிற்றிலக்கத்தையும் ஒரேசிற்றிலக்கமாக்குதற்கு இதின்கீழிலக்கத்தைக்கொண்டு பேரிலக்கத்தைப்பெருக்கிக் குறித்தோடுமேலிலக்கத்தைக்கூட்டி இதனுடைய தொகையின் கீழே கீழிலக்கத்தை எழுதவேண்டும்.

உம். ௩ ௧/௨ = ௭/௨, ௪ ௨/௫ = ௨௨/௫, ௮ ௨/௩ = ௨௬/௩.

---

### கீழிலக்கங்களைச்சரிபொருத்தாக்கல்.

நாமகாரணமென்னுங் கீழிலக்கம் வெவ்வேறுள்ள சிற்றிலக்கங்களை மதிப்பதுங் கலப்பதும் அருமையாகும்போது கீழிலக்கங்களைச்சரிபொருத்தாக்கவேண்டும். இந்தக்கருமமானது சிற்றிலக்கங்களை ஒரே நாமகாரணமுள்ளதாக்கலெனவும் படுமே. அதெப்படியாகுமெனில்,

இரண்டுசிற்றிலக்கங்கள்மாத்திரமிருந்தால் முதலானதின் இருவிலக்கங்களையும் இரண்டாஞ்சிற்றிலக்கத்தின்கீழிலக்கத்தைக்கொண்டுபெருக்கிஇரண்டாஞ்சிற்றிலக்கத்தின் இருவிலக்கங்களையுமுதலானதின்கீழிலக்கத்தைக்கொண்டு பெருக்கவேண்டும்.

உம். ௪/௭, ௩/௫; ௨0/௩0, ௧௮/௩0.

வெவ்வேறு கீழிலக்கமுள்ள அநேகசிற்றிலக்கங்களிருந்தால் இவைகளிலொவ்வொன்றின் இருவிலக்கங்களையும் வேறே சிற்றிலக்கங்களுடையகீழிலக்கங்களின் குணிதத்தைக்கொண்டுபெருக்கவேண்டும்.

இவ்விதமாய் $\frac{௧}{௨}$, $\frac{௨}{௩}$, $\frac{௩}{௪}$, $\frac{௪}{௫}$ என்னுஞ் சிற்றிலக்கங்களை ஒரே நாமகாரணனுள்ளதாக்குதற்குமூன்று-௩,௪,௫- என்னுங்கீழிலக்கங்களைப் பெருக்கவேண்டும். ஆதலால் ௩ × ௪ = ௧௨, ௧௨ × ௫ = ௬0 எனவரும். பின்னும் $\frac{௧}{௨}$ என்னு முதற் சிற்றிலக்கத்தின் இருவிலக்கங்களையும் -௬0- என்னுங்குணிதத்தைக்கொண்டுபெருக்கினால், ௬0/௧௨0- என்பதாம். அப்படிமுதல் மூன்றும் நாலாஞ் சிற்றிலக்கத்துக் கீழிலக்கங்களைப்பெருக்கினால், ௨ × ௪ = ௮, ௮ × ௫ = ௪0. ஆதலால், ௪0-குணிதமாகும். இதைக்கொண்டு இரண்டாஞ்சிற்றிலக்கத்தி லிருவிலக்கங்களையும்பெருக்கினால், ௮0/௧௨0-என்பதாகும். இவ்விதமே முதலிரண்டாம் நாலாஞ்சிற்றிலக்கங்களின் கீழிலக்கங்களைப்பெருக்கினால், ௨ × ௩ = ௬, ௬ × ௫ = ௩0, இதுதான் குணிதமாகும். இதைக்கொண்டு மூன்றாஞ்சிற்றிலக்கத்தி னிருவிலக்கங்களையும் பெருக்கினால், ௯0/௧௨0- என்பதாகும். கடைசியாய் மூன்று முதற்சிற்றிலக்கங்களின் கீழிலக்கங்களைப் பெருக்கினால், ௨ × ௩ = ௬, ௬ × ௪ = ௨௪, இதுவே குணிதமாகும். இதைக்கொண்டு நாலாஞ் சிற்றிலக்கத்தி னிருவிலக்கங்களையும்பெரு

க்கிறால் ௯௬/௧௨0-எனவரும். இவ்விதமாய்க்கொடுக்கிறதொகைமாறாமல்உருவுமாத்திரமாறி,

$$\frac{௧}{௨} + \frac{௨}{௩} + \frac{௩}{௪} + \frac{௪}{௫} \text{ என்பவை}$$

$$\frac{௬0}{௧௨0} + \frac{௮0}{௧௨0} + \frac{௯0}{௧௨0} + \frac{௯௬}{௧௨0} \text{ என்பவையாயின.}$$

இவைகளைக் கூட்டுக்கணக்காய்க் கூட்டினால் $\frac{௩௨௬}{௧௨0}$ எனவரும். பின்னுமிதிலேயடங்கியபேரிலக்கத்தைப்பிரித்தெடுப்பதற்கு மேலிலக்கத்தைக் கீழிலக்கத்தாற் பிரித்தால், ௨ $\frac{௮௬}{௧௨0}$ அல்லது ௨ $\frac{௪௩}{௬0}$ எனவரும்.

அநேகசிற்றிலக்கங்களை ஒரேநாமகாரணனுள்ளதாக்குதற்கு இன்னஞ்சிகசுருக்கமானவிதமுண்டு. அதென்னவென்றால் முந்தவவைகளின் சகல கீழிலக்கங்களையும் ஒன்றொன்றைக்கொண்டுபெருக்கி ஆகிறகுணிதத்தைப்பொதுக்கீழிலக்கமாகிய நாமகாரணனாகவைக்கிறது. பிற்பாடு அந்தப்பொதுக்கீழிலக்கத்தை அந்தந்தச்சிற்றிலக்கத்தின் கீழிலக்கத்தாற்பிரித்துவந்ததை அந்தந்த மேலிலக்கத்தைக்கொண்டுபெருக்கிக்காணுங்குணிதத்தை அந்தந்தச்சிற்றிலக்கத்தின் மேலிலக்கமாக வைக்கவேணும். உம். $\frac{௧}{௨}, \frac{௧}{௩}, \frac{௨}{௫}, \frac{௪}{௭}, \frac{௩}{௮}$ என்பவைகளின் கீழிலக்கமெல்லாம்பெருக்கினால், ௨ × ௩ = ௬, ௬ × ௫ = ௩0, ௩0 × ௭ = ௨௧0, ௨௧0 × ௮ = ௧௬௮0. இதுவே குணிதமாகையால், பொதுக்கீழிலக்கமாகும். இதைமுதற்சிற்றிலக்கத்தின் கீழிலக்கமாகிற-௨-கொண்டுபிரித்தால், ௮௪0- என்பது வரா

வரும். இந்தஈவை -க- என்கிற அதின்மேலிலக்கத்தைக்கொண்டுபெருக்கினால் -அ௪0- தான்ஆகும், இதை அந்தச்சிற்றிலக்கத்தின் மேலிலக்கமாகவைத்து மற்றவைகளுக்குமப்படியேசெய்தால், $\frac{அ௪0}{க௬அ0}$, $\frac{ரு௬0}{க௬அ0}$, $\frac{௬எஉ}{க௬அ0}$, $\frac{௯௬0}{க௬அ0}$, $\frac{எரு0}{க௬அ0}$ எனவரும். இவைகளின் மேலிலக்கங்களைக்கூட்டினால் $\frac{௩௮௬௨}{க௬அ0}$ என்பதாம். இதிலே மேலிலக்கத்தைப்பிரித்தெடுத்தால், உ $\frac{ரு0உ}{க௬அ0}$ அல்லது உ $\frac{உருக}{அ௪0}$ எனவரும்.

இவ்விதமாய் அந்தந்தச் சிற்றிலக்கத்தின் இலக்கங்களைக்கொண்டு பொதுக்குணிதத்தைப் பிரித்துப்பெருக்குகிறதினாலே அதுகள் கொடுக்கிற தொகைமாறாது. அன்றியும் அவைகளெல்லாத்துக்கும் அந்தக்குணிதமே சரியொத்த கீழிலக்கமாம்.



## சிற்றிலக்கக்கூட்டுக்கணக்கு.

கூட்டவேண்டிய சிற்றிலக்கங்களின் கீழிலக்கங்கள் சரியொத்தவைகளாயிருந்தால் மேலிலக்கங்களைக் கூட்டி அதுகளுடைய தொகையின் கீழே பொதுக்கீழிலக்கத்தை வைக்கவேண்டும். உம்.

$$\frac{உ}{௬}+\frac{௩}{௬}+\frac{௪}{௬}=\frac{௯}{௬} \text{ அல்லது } க\frac{உ}{௬} \text{ அல்லது } க\frac{க}{உ}$$

$$\frac{௩}{கஉ}+\frac{௬}{கஉ}+\frac{ரு}{கஉ}+\frac{அ}{கஉ}=\frac{உ0}{கஉ} \text{ அல்லது } க\frac{அ}{கஉ}=க\frac{உ}{௩}$$

கீழிலக்கங்கள் வெவ்வேறாயிருந்தால் அதுகளை மேற்சொல்லியவிதமாய்ச்சரியொத்ததாக்கிப் பின்பு கூட்டுக்கணக்கு இப்போதுசொன்னபிரகாரமாய்ச்செய்யவேணும். உம்.

$\frac{௧}{௩} + \frac{௧}{௪}$ என்னுஞ்சிற்றிலக்கங்களின்கீழிலக்கங்களை ஒத்ததாக்கிக்கூட்டினால் $\frac{௪}{௧௨} + \frac{௩}{௧௨} = \frac{௭}{௧௨}$ ஆகும். அப்படியே $\frac{௧}{௨} + \frac{௩}{௫}$ என்பவை $\frac{௫}{௧௦} + \frac{௬}{௧௦} = \frac{௧௧}{௧௦}$ அல்லது ௧ $\frac{௧}{௧௦}$

---

சிற்றிலக்கக்கழிப்புக்கணக்கு.

ஒருசிற்றிலக்கத்தினின்று கழிக்கவேண்டியசிற்றிலக்கத்துக்கு அத்தோடே சரியொத்தகீழிலக்கமிருந்தால் அதிகபெரிதானமேலிலக்கத்தினின்று சிறிதானதைக்கழிக்கவேணும். உ-ம். $\frac{௬}{௨௩} - \frac{௪}{௨௩} = \frac{௨}{௨௩}$

கழிக்கவேண்டியசிற்றிலக்கங்களுக்கு வெவ்வேறு கீழிலக்கங்களிருந்தால் முன்னேசொல்லியமுறையின்படியே அதுகளைச்சரியொத்ததாக்கிப் பின்னும் மேலிலக்கங்களிற்சிறிதானதைப் பெரிதானதினின்றுகழிக்கவேணும். உ-ம்.

$\frac{௧}{௨} - \frac{௧}{௩} = \frac{௩}{௬} - \frac{௨}{௬} = \frac{௧}{௬}$; $\frac{௨}{௫} - \frac{௨}{௭} = \frac{௧௪}{௩௫} - \frac{௧௦}{௩௫} = \frac{௪}{௩௫}$

---

சிற்றிலக்கப்பெருக்குக்கணக்கு.

ஓர்சிற்றிலக்கத்தைக்கொண்டு ஒருபேரிலக்கத்தை யாவது பேரிலக்கத்தைக்கொண்டு சிற்றிலக்கத்தை யாவது பெருக்குதற்கு மேலிலக்கத்தைக்கொண்டு பேரிலக்கத்தைப்பெருக்கி இவைகளின்குணிதத்தி

ன்கீழேகீழிலக்கத்தைமாறுதலிதமாய் எழுதவேணும். உம். $௬ \times \frac{௫}{௧௨} = \frac{௩0}{௧௨}$ அல்லது $௨\frac{௬}{௧௨} = ௨\frac{௧}{௨}$.

$\frac{௨}{௩} \times ௪ = \frac{௮}{௩} = ௨\frac{௨}{௩}$; $௧௨ \times \frac{௨}{௫} = \frac{௨௪}{௫} = ௪\frac{௪}{௫}$.

சிற்றிலக்கங்களைப்பெருக்குதற்கு ஒன்றின்மேலிலக்கத்தைக்கொண்டு மற்றொன்றின்மேலிலக்கத்தையுங்கீழிலக்கத்தைக்கொண்டுகீழிலக்கத்தையும் பெருக்கவேண்டியது. உம்.

$\frac{௧}{௨} \times \frac{௨}{௩} = \frac{௨}{௬}$; $\frac{௨}{௫} \times \frac{௪}{௭} = \frac{௮}{௩௫}$; $\frac{௩}{௪} \times \frac{௫}{௧0} = \frac{௧௫}{௪0}$.

இதிலேவிளங்குகிறபடியே குணகமானது சிற்றிலக்கமாயிருக்கிறபோது குணிதங் குண்ணியத்திலுஞ் சிறிதானதொகைகொடுக்கும். எனென்றாற் குணிதமானது குணகங்குறிக்கிறவளவாகக் குண்ணியத்திலெடுத்தபங்காயிருக்கும்.

---

## சிற்றிலக்கப்பிரிவுகணக்கு.

முதலாவது ஒருபேரிலக்கத்தைக்கொண்டு யாதோர் சிற்றிலக்கத்தைப்பிரிக்கும்பொருட்டு இதின் கீழிலக்கத்தைப்பேரிலக்கத்தைக்கொண்டு பெருக்கி அவைகளுடையகுணிதத்தின்மேலே மேலிலக்கத்தையெழுதவேணும். உம். $\frac{௪}{௫} : ௬ = \frac{௪}{௩0}$.

உ-வது. ஒருசிற்றிலக்கத்தைக்கொண்டியாதோர் பேரிலக்கத்தைப்பிரிப்பதற்கு இதனைக்கீழிலக்கத்தைக்கொண்டுபெருக்கிக்குணிதத்திற்கு மேலிலக்கத்தைக்கீழிலக்கமாகஎழுதவேணும். உம்.

$௧0 : \frac{௨}{௪} = \frac{௪0}{௨}$ அல்லது ௨0.

௩-வது. யாதோர் சிற்றிலக்கத்தைக்கொண்டு மற்றோர்சிற்றிலக்கத்தைப்பிரிப்பதற்கு முதல்மேலிலக்கத்தை இரண்டாங்கீழிலக்கத்தாலும் முதற்கீழிலக்கத்தை இரண்டாம்மேலிலக்கத்தாலும்பெருக்கவேணும். அல்லது இரண்டாஞ் சிற்றிலக்கத்தின்மேலிலக்கத்தைக்கீழிலக்கமாகவுங் கீழிலக்கத்தை மேலிலக்கமாகவும் எழுதி மேலிலக்கத்தைக்கொண்டு மற்றமேலிலக்கத்தையுங்கீழிலக்கத்தைக்கொண்டு மற்றக் கீழிலக்கத்தையும்பெருக்கவேண்டியது. உப்.

முதல் வகை. } $\frac{௬}{௭} : \frac{௫}{௮} = \frac{௪௮}{௩௫}$ அல்லது $௧\frac{௧௩}{௩௫}$

௨-ம். வகை. } $\frac{௪}{௮} : \frac{௩}{௫} = \frac{௪ \times ௫}{௮ \times ௩} = \frac{௨0}{௨௪}$ அல்லது $\frac{௫}{௬}$

இதிலேவிளங்குகிறபடியேசிற்றிலக்கத்தைக்கொண்டுயாதோரிலக்கத்தைப்பிரிக்கிறபோது ஈவுபாச்சியமாகியமுதல்இலக்கத்தைவிடப் பெரியதொகைகொடுக்கும். எனெனிற் பசகமாகியசிற்றிலக்கம் பாச்சியத்தில் எத்தனைவிசையடங்கியிருக்கின்றதென்று ஈவுகாட்டுகின்றது.

$\frac{௫}{௬}$ முழப்புடவைக்கு $\frac{௫}{௯}$ ரூபாய்பெறுமாகில்முழமெவ்வளவுபெறும்? $\frac{௫}{௬} : \frac{௫}{௯} = \frac{௫ \times ௯}{௬ \times ௫} = \frac{௪௫}{௩0}$ அல்லது $௧\frac{௧௫}{௩0} = ௧\frac{௧}{௨}$ ஆதலால்முழமொன்றரைரூபாய்பெறும்.



## கீழ்வாயிலக்கம் அல்லது சிற்றிலக்கத்துச் சிற்றிலக்கம். Fractions de fractions.

ஓர்சிற்றிலக்கத்தைமற்றோர்சிற்றிலக்கத்தைக்கொண்டு பெருக்குவதினாலாகிற குணிதமாகியபேறு அதின்சிற்றிலக்கமெனப்படும். கீழ்வாயிலக்கமென்ன

## சிற்றிலக்க பேரிலக்கக் கணிப்பு.

சிற்றிலக்க பேரிலக்கமென்பது பேரிலக்கஞ் சேர்ந்தசிற்றிலக்கமாம்.

அப்படி ஓர்சிற்றிலக்கத்தை யாதோர் பேரிலக்கஞ்சேர்ந்துவரும்போது கூட்டுக்கணக்குமுதலிய கணக்குகளைச்செய்வதற்கு முன்னே பேரிலக்கத்தைச்சிற்றிலக்கத்தோடே ஒன்றாக்கிறதுண்டு. அதற்குப் பேரிலக்கத்தைக் கீழிலக்கத்தைக்கொண்டு பெருக்கி மேலிலக்கத்தோடே கூட்டவேண்டும். உம். ௫ $\frac{௪}{௮} = \frac{௪௪}{௮}$; ௭ $\frac{௨}{௩} = \frac{௨௩}{௩}$.

ஆயினும் பேரிலக்கத்தைச்சிற்றிலக்கமாக்காமற் பேரிலக்கங்களையுஞ்சிற்றிலக்கங்களையும் வெவ்வேறாகக்கூட்டவுங்கழிக்கவுங்கூடும்.

விசேஷமாய்ப் பேரிலக்கம் பெருந்தொகையாயிருக்கிறபோது இப்படிசெய்யத்தகும். அப்போது சிற்றிலக்கத்தொகை பேரிலக்கங்கொடுத்தால் இதை மீதியானதசம்போலே பேரிலக்கத்தோடே கூட்டவேணும். உம்.

௮௫௧ $\frac{௪}{௮}$

௧௫௬ $\frac{௫}{௬}$ $\qquad \frac{௪}{௮} + \frac{௫}{௬} = \frac{௨௪}{௪௮} + \frac{௪0}{௪௮} = \frac{௬௪}{௪௮} = ௧\frac{௧௬}{௪௮}$

---

௧00௮ $\frac{௧௬}{௪௮}$ அல்லது $\frac{௧}{௩}$

சிற்றிலக்க பேரிலக்கங்களைத் தனியாய்க்கழிக்கும்போது மேலானபேரிலக்கத்தைச்சேர்ந்த சிற்றிலக்கம் மற்றதைவிடச்சிறுதொகையாகில் அதின்கீழிலக்கத்துக்கு ஒத்ததொகைகொடுக்கிற ஒரு

### சிற்றிலக்கப்பேரிலக்கப்பெருக்குக்கணக்கு.

இதற்குப்பேரிலக்கத்தைக் கீழிலக்கத்தைக்கொண்டுபெருக்கி மேலிலக்கத்தோடேகூட்டிப்பெருக்குக்கணக்குச்செய்யவேணும். உம்.

$$௨\frac{௨}{௩} \times ௩\frac{௪}{௫} = \frac{௮}{௩} \times \frac{௧௯}{௫} = \frac{௧௫௨}{௧௫} = ௰\frac{௨}{௧௫}$$

ஒருநாட்கூலியாக-௨ $\frac{௩}{௪}$ பணம்வாங்குகிறவன் ௧௨ $\frac{௧}{௨}$ நாளுக்குளத்தனைவாங்குவான்? $௨\frac{௩}{௪} \times ௧௨\frac{௧}{௨} = \frac{௧௧}{௪} \times \frac{௨௫}{௨} = \frac{௨௭௫}{௮} = ௩௪\frac{௩}{௮}$ பணம்.

### சிற்றிலக்கப்பேரிலக்கப்பிரிவுகணக்கு.

மேற்சொல்லியபடிப்பேரிலக்கத்தைச்சிற்றிலக்கத்தோடேயொன்றாக்கிப்பிரிவுகணக்குச்செய்யவேணும். உம்.

$$௪\frac{௧}{௨} : ௨\frac{௩}{௪} = \frac{௯}{௨} : \frac{௧௧}{௪} = \frac{௯}{௨} \times \frac{௪}{௧௧} = \frac{௩௬}{௨௨} = ௧\frac{௧௪}{௨௨}$$ அல்லது $௧\frac{௭}{௧௧}$

௨௨ $\frac{௩}{௪}$ முழப்புடவை ௨00 $\frac{௧}{௫}$ பணம்பெற்றது, முழமெவ்வளவுபெறும்?

$$௨00\frac{௧}{௫} : ௨௨\frac{௩}{௪} = \frac{௧00௧}{௫} : \frac{௯௧}{௪} = \frac{௧00௧}{௫} \times \frac{௪}{௯௧} = \frac{௪00௪}{௪௫௫}$$ அல்லது $௮\frac{௩௬௪}{௪௫௫}$. இப்படி $௮\frac{௩}{௪}$ பணத்துக்குக்கொஞ்சமதிகமாகும்.

---

### தசசிற்றிலக்கம்.

ஏகமானது தசமாய்ப்பிரிகிறசிற்றிலக்கமே தசசிற்றிலக்கமெனப்படும். சிற்றிலக்கப்பேரிலக்கங்க

ணக்கணிப்பதற்கு இந்தமுறை மிகவுமெளிதாம்.

பேரிலக்கமுந் தசசிற்றிலக்கமுமடங்கிய இலக்கந் தசவிலக்கமென்னப்படும்.

தசசிற்றிலக்கத்தை எழுதும்வகையென்னவெனில்முந்தப்பேரிலக்கத்தையும் அதின்முன்வாற்புள்ளியையும் எழுதி இதின்முன் தச, சத, சகத்திர முதலிபகிரமச்சிற்றிலக்கக்கணக்கக்ஷரங்களையுமெழுதவேணும். உம். ௨௭,௩௪௬.

தசசிற்றிலக்கங்களைவாசிக்கும்வகையாவது: வாற்புள்ளிக்குப்பின்னிருக்கிற கணக்கக்ஷரங்கள் பேரிலக்கமாயிருக்கின்றமையால் ஏகங்களைக்காட்டும். வாற்புள்ளிக்குமுன் அதற்கடுத்தகணக்கக்ஷரம் ஏகத்துப்பங்குகளின் தசங்களையும் இதின்முன்னிருக்கிறகணக்கக்ஷரங்கள் கிரமமாய்ச்சதங்களையும், சகத்திரம் அயுதம்முதலியதுகளையுங்காட்டும். ஆகலால்முன்னேபேரிலக்கத்தையுச்சரித்துப் பின்னுஞ் சிற்றிலக்கத்துக்கடைசியக்ஷரத்தின் கிரமப்பேரை இல்-வேற்றுமையிலேவைத்து அதின்பங்குகளுடைய தொகையாகிய சிற்றிலக்கத்தைவாசிக்கவேணும். உம். ௨௭,௩௪௬-என்பது இருபத்தேழு ஏகங்களும் ஆயிரத்தில் முந்நூற்றுநாற்பத்தாறுபங்குகளுமென்னப்படும்.

இப்படி பேரிலக்கங்கள் ஏகம்முதல், தசம், சதம், முதலியகிரமமாய்ப்பின்னுக்குப்போகிறதுபோலே தசசிற்றிலக்கங்கள் ஏகங்களாகிய பேரிலக்கத்துவக்கித் தசம், சதம்முதலியகிரமமாய் முன்னுக்குப்போம். ஆனாற் பேரிலக்கத்தில் அந்தந்தக் கணக்கக்ஷரத்துக்குக் கணக்குகிரமமாகத் தசமாய் உயர்ந்துபோகின்றது. தசகணக்குகளிலோவெனி

